Post without pre-payment Licence No. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the people

# புரட்சித்தலைவர் விளக்க உரை

Regd No. TN - MS [C] 244 Phone: 420212 பக்கம் 4 விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 29 11 86 சனி வெளியூர் 30 11 86 ஞாயிறு இதழ் 43

## நலிவுற்ற மக்களுக்காக அக்கறையுடன் பாடுபடுகிறோம்



### மதுராந்தகத்தில் நடந்த மாபெரும் கூட்டத்தில் முதல்வர் முழக்கம்

**சென்னை, நவ. 29- நலிவுற்ற மக்களின் நல்வாழ்வில் இந்த அரசு மிகுந்த அக்கறை கொண்டுள்ளது என்று முதல்வர் புரட்சித்தலைவர் மதுராந்தகம் கூட்டத்தில் குறிப்பிட்டார்.**

மதுராந்தகம் விழாவில் முதல்வர் புரட்சித் தலைவா ஆற்றிய உரை விவரம் வருமாறு:

என்னை வாழவைக்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே!

(கைதட்டல்)

என்னை வழிநடத்திச் செல்லும் பெரியோர்களே!

என் ரத்தத்தின்ரத்தமான உடன்பிறப்புக்களே!

(பலத்தகைதட்டல)

இந்த மாபெரும் விழாவில் நான் பங்கு கொண்டு உங்களையெல்லாம் காண்பதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்,

இந்த அரசு வெள்ளம், வறட்சி போன்ற நேரங்களில் போர்க்கால வேகத்தில் பணியாற்றி வருகிறது.

புயல் மற்றும் வெள்ளத்தால் ஏற்பட்ட பாதிப்புக்களை வேகமாகச் சரி செய்து வந்திருக்கிறது.

மதுராந்தகம் ஏரி உடைப்பு ஏறபட்ட பின் குறுகிய காலத்தில்பழுது பார்க்கப்பட்டது.

இன்று இந்த ஏரி முழுவதும் செப்பனிடப் பட்டு விடடது இந்தஏரி நீரின் பாசன வசதி அதிகரிகும் வகையில் உயர் மட்டக் கால்வாய் கட்டப் பட இருக்கிறது.

#### வெள்ள அபாயம் தடுப்பு

இந்த உயர்மட்டக் கால்வாய் கட்டப்படுவதன் மூலம் வெள்ளஅபாயம் தடுக்கப்படும்.

அதற்கான பணிகளை நான் இங்கேஆரம்பிதது வைப்பதில் பெருமை அடைகிறேன்.

இந்த மேல்மட்டக் கால்வாய் மூலம் மேலும் 31 கிராமங்கள் பாசன வசதி அடையும்.

இந்த மேல்மட்டக் கால்வாய் திட்டத்திற்கு ரூபாய்4கோடியே50 லட்சம் நிதி ஒதுககீடு செய்யப்பட்டு இருக்கிறது.

மக்களின் வசதிகளைப பெருக்கவும், வாழ்க்கைத் தரததை உயாத்தவும் இந்த அரசு பல வளாச்சித் திட்டங்களை செயல்படுதத்வருகிறது.

ஆறு நகரங்களுக்கும், 54 ஒன்றியங்களுககும்மொத்தம்ரூபாய்386 லட்சம் செலவில் குடிநீர் திட்டப் பணிகள் இன்று தொடங்கப்பட்டு இருககின்றன.

நலிவுற்ற மககளின் நல்வாழவில் இந்தஅரசு மிகுந்த அக்கறைகொண்டுள்ளது

#### முதியோருக்கு உதவித் தொகை

ஆதி கிராவிடர்சள் சிறு தொழில் புரிவோருக்கு உதவித் தொகை, முதியோருக்கு உதவித் தொகை, கணவனால் கைவிடப்பட்ட பெண்களுக்கு உதவி தொகை ஏழைகளுக்கு நிலம், மற்றும் வீட்டுமனைப் பட்டாக்கள் ஆகியவை வழங்கப்பட்டு வருகின்றன.

அண்ணா நாமம் வாழ்க!

நன்றி!

வணக்கம்!

இவ்வாறு முதல்வர் புரட்சிததலைவா பேசினார்.

### மத்திய அமைச்சர்களுடன் இலங்கை தூதர் சந்திப்பு

புதுடெல்லி, நவ. 29- இந்தியாவுக்கான இலங்கை தூதர் திலகரத்னா மத்திய அமைச்சர்கள் சிதம்பரத்தையும், நட்வர்சிங்கையும் சந்தித்து இலங்கை பிரச்சனை குறித்து பேசினார்.

மத்திய அமைச்சர்கள் சிதம்பரமும் நட்வர்சிங்கும் இலங்கை சென்றபோது திலகரத்னாவும் உடன் சென்றிருந்தார். இலங்கையில் அதிபர் ஜெயவர்த்தனேவுடன் பேசிய பின் திலகரத்னா மத்திய அமைச்சர்களை சந்தித்து இலங்கை அரசின் நிலைமைகளை எடுத்துக் கூறினார்.

### இலங்கையில் மாணவிகள் உண்ணாவிரதம்

கொழும்பு, நவ. 29- இலங்கை யாழ்ப்பாணம் பல்கலைக்கழகத்தை சேர்ந்த தமிழ் மாணவிகள் ஒரு மாணவிகடத்தப்பட்ட சமபவத்தை அடுத்து காலவரையற்ற உண்ணா விரதத்தை கடந்த பத்து தினங்களாக மேற்கொண்டுள்ளனா.

மாணவிகளின் உண்ணாவிரத போராட்டத்தை ஆதரித்து அங்குள்ள மற்ற மாணவிகளும் வகுப்புகளை பகிஷ்காரம் செய்துள்ளனர்.

சந்தர்ப்பவாத செயலால் சறுக்கி விழும் தி.மு.க.

## அடுக்கடுக்காய் தொடரும் தி.மு.க. அந்தர் பல்டிகள்

**அன்றும்**

இந்தி ஆதிக்க எதிர்ப்பு
எரியூட்டப்பட வேண்டிய
சட்டப் பிரிவு - வாசகங்கள்

PART XVII
Official Language
Chapter I-Language of The Union
343 Official Language Of The Union
(1) The Official Language of The Union Shall be Hindi In Devanagari Script

★

பதினேழாம் பாகம்
அலுவல் மொழி
(OFFICIAL LANGUAGE)

முதல் அத்தியாயம் - மத்திய அரசின் மொழி

343 (1) தேவநாகரி வரிவடிவத்தில் (லிபி) உள்ள ஹிந்தி, இந்தியாவின் அதிகாரபூர்வமான மொழியாக இருக்கவேண்டும்.

[இந்திதான ஆட்சிமொழி என்னும் மேற்கண்ட - சட்டப்பிரிவின் வாசகங்களை அச்சிட்டு அலலது தட்டச்சு செய்து தலைமைக்கழகம் அறிவித்துள்ள நாட்களில அறப்போரில ஈடுபடுபவர்கள குறிப்பிட்ட இடத்தில எரித்து இந்தி ஆதிக்கத்துககு எதிர்ப்புத் தெரிவிக்க வேண்டும்.]

17.11.86 - தலைமைக்கழகம் தி. மு. க.

**இன்றும்**

இந்தி ஏகாதிபத்திய எதிர்ப்பு
அறப்போரில்
எரியூட்டப்பட வேண்டிய
வாசகம்

தலைமைக் கழகம் அறிவித்துள்ள நாட்களில் இந்தி ஆதிக்க எதிர்ப்பு அறப்போரில் ஈடுபடுகிறவர்கள் கீழேயுள்ள கட்டத்தில் காணப்படும் வாசகத்தை ஒரு தாளில் குறிப்பிட்டு; அறிவிக்கப்பட்ட இடங்களில் அதனை எரித்து இந்தி ஏகாதிபத்ய எதிர்ப்பைத் தெரிவிக்க வேண்டும்.

தேவநாகரி வரி வடிவத்தில் உள்ள இந்திதான் இந்தியாவின் அதிகாரபூர்வமான மொழியாக இருக்க வேண்டும்.

The official Language of the Union shall be Hindi in Devanagari Script.

28.11.86 தலைமைக் கழகம் தி. மு. க.

சென்னை, நவ .29- திமுகவின் இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் தலை கீழ்மாற்றம்செய்யப் பட்டுள்ளது.

''இந்தி திணிப்பை'' கண்டிக்கும் வகையில் அரசியல் சட்டத்தின் 17வது பிரிவை எரிப்பதாக கூறி வந்த திமுகவினர் தற்போது அந்தநிலையிலிருந்துமாறு பட்டுள்ளனர்.

'இந்த எரிப்புபோராட்டத்தில் எம்.பி களும்-எம் எல்.ஏக்களும் தொடர்ந்து பங்கேற்பா'' எனறு இவ் வார துவக்கத்தில் கூறிய திமுக தலைவர் கருணாநிதி இப்போது அவர்களில் சிலர்இந்தஎரிப்புபோராட்டத்தில் பங்கேறக மாட்டார்கள் என கூறி இருக்கிறார்.

#### நவம்பர் 9

இம்மாதம் 8,9 தேதிகளில் கோவையில் கூடிய தி.மு.க. செயற் குழுவில் ''இந்திஎதிர்ப்பு''போராட்டம் குறித்து சில முடிவுகள் எடுத்து அதுபற்றி திமுக. தலைவர் கருணாநிதி நிருபர்களிடம் கூறுகையில், 'இந்தியை அதிகாரப்பூர்வ மொழியாக ஆக்கும் இந்திய அரசியல் சாசன 17வது பிரிவை எரிப்பது என திமுக முடிவு செய்துள்ளது. இந்த கிளர்ச்சி நவம்பா17ம்தேதியிலிருந்து துவங்கும் நவம்பர் 17ம் தேதி கட்சிபொது செயலாளர் அன்பழகன் சென்னையில் நடக்கும் கிளர்ச்சிக்கு தலைமை வகிப்பார் என்றுகூறினார்.

#### நவம்பர் 17

கருணாநிதியின் இந்க அறிவிப்புககுஇணங்க 17ம் தேதி அரசியல் அமைப்புச் சட்டத்தின் ஆட்சி மொழி பற்றிய 17-வது பிரிவின அச்சிடப்பட்ட காகிதத்தைக் கொளுத்தியதற்காக தி.முக. எம். எல். ஏ, அன்பழகன், உட்பட 300 பேர் சென்னையில் கைதுசெய்யப்பட்டார்கள. அனைவரும் 15 நாள் கோர்ட் காவலில் வைக்கப்பட்டார்கள்

அரசியல் சட்டத்தை எரித்து சிறைசென்றுள்ள அன்பழகன் உள்ளிட்ட 7 எம் எல். ஏக்கள் பதவி இழககிறார்கள், அவர்கள் எம். எல் .ஏ பதவியில் நீடிக்க தகுதி அற்றவர்கள் ஆகிறார்கள் என்று சட்ட சபையில் சபாநாயகர் பி. எச்.பாண்டியன் அறிவித்தார்.

இதுபற்றி கருணாநிதி கருத்து தெரிவிககையில் 'இந்த அறிவிப்பின் காரணமாக அரசியல் சட்ட 17வது பிரிவு எரிப்பு போராட்டத்தில் கலந்து கொள்வதாக அறிவிக்கப்பட்டுள்ள எம் எல் ஏக்கள் ஒதுங்கி விட மாட்டார்கள். தொடர்ந்து ஏற்கனவே அறிவிததபடி அறப் போராட்டம் நடக்கும். இதுபற்றி விவாதிக்க திமுக. தலைமை நிர்வாகக்குழு 26ம் தேதி கூடுகிறது எம். எல். ஏக்கள் நீக்கம் திமுக. போராட்டத்தைத் தீவிரப்படுத்துவதாக அமையும்'' என்றார்.

#### நவம்பர் 25

அருப்புக் கோட்டையில் தி. மு. க. கூட்டத்தில் கருணாநிதி பேசுகையில் '7எம் எல் ஏக்கள் பதவி பறிப்பை எதிர்த்து சுப்ரீம் கோர்ட் வரை செல்வோம். 7 சட்ட மன்ற உறுப்பினர்கள் பதவி பறி போனாலும் மற்ற 15 பேரும் இந்த காரியம் செய்யப் போகிறார்கள் என்றார்.

#### நவம்பர் 26

பின்னர்சேலத்தில்நடந்த நிர்வாக குழுவில் எடுககப் பட்ட முடிவுகள் குறித்து கருணாநிதி நிருபர்களிடம் கூறுகையில் ''இந்தி திணிப்புக்கு எதிரான அரசியல் சாசன சடடப்பிரிவை எரிக்கும் கிளர்ச்சியை தொடர்ந்து நடத்துவது என்றும் இக் கிளர்சசியில் கட்சி எம்.எல் ஏக்களும் பங்கு பெறுவார்கள் என திமுக. மத்திய செயற்குழு முடிவு செய்துள்ளது.

அரசியல் சட்டத்தின் 17வது பிரிவின் ஒரு பகுதி வாசகத்தை ஒரு தாளில் வெறுமனே எழுதி தீயிட்டு கொளுத்துவதுஅரசியல் சாசனத்தை மீறுவது ஆகாது. அரசியல் சாசனத்தை அவமதிக்கும் எண்ணம் எங்களுக்கு கிடையாது'' என்றார்.

#### நவம்பர் 27

எரிப்பு போராட்டத்தில் இன்னமாதிரியான வாசகம் எழுதப்பட்ட தாளைத் தான் எரிக்கவேண்டும் என்று திமுக. தலைமைக் கழகம் அறிவித்துள்ளது,

இதுவரை நடந்தஎரிப்பு போராட்டத்தில் எரிக்கப் பட்ட காகிதத்தில், ''17ம் பாகம் அலுவல் மொழி, முதல் அத்தியாயம்மத்திய அரசின் மொழி 343(1) தேவநாகரி வரிவடிவத்தில் (லிபி) உள்ள இந்தி இந்தியாவின் அதிகாரப் பூர்வமான மொழியாக இருக்க வேண்டும்'' என்ற எழுதப்பட்டிருந்தது. ஆனால் இனிமேல் இந்த எரிப்பு போராட்டத்தில் கலந்து கொள்பவர்கள் ''தேவநாகரி வரி வடிவத்தில் உள்ள இந்தி தான் இந்தியாவின் அதிகாரப் பூாவமான மொழியாக இருக்க வேண்டும்'' என்று வாசகத்தை மட்டுமே ஒரு தாளில் குறிப்பிட்டு எரிக்க வேண்டும என்று திமுக மேலிடம் அறிவிப்பு வெளியிட்டது.

#### நவம்பர் 28

நேற்றுதி.முக தலைவர் கருணாநிதி வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:

பாராளுமன்றம், சட்டமன்றம் ஆகிய ஆட்சி மன்றங்களில கூட கழகத்தின் சார்பில் மக்களுககாகவும் வேறு பல பிரச்னைகளுக்காகவும் குரல் எழுப்பி ஜனநாயகக் கடமையாற்றிட அந்த அமைப்புகளில் ஒரு சிலராவது வெளியில் இருக்க வேண்டும் என்ற முடிவு ஏற்கனவே செயற் குழுவில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

எனவே சட்டப்பேரவையில் குறிப்பிட்ட எண்ணிக்கையினரும் பாராளுமன்ற இரு அவைகளிலும் உள்ள நமது உறுப்பினர்கள் அறப் போரில் கலந்து கொள்ள அனுமதிக்கப்படாமல் வெளியிலிருந்து பணியாற்றவேண்டியநிலையையும் தலைமைக் கழகம் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது.

எனவே தலைமை கழகத்தால் ஒப்புக்கொள்ளப் பட்டு அறிவிக்கப்படுகிற பட்டியலை மீறி நாடாளு மன்ற, சட்ட மன்ற உறுப்பினர்களோ அல்லது உள்ளாட்சி மன்றங்களில் பொறுப் பில்உள்ளவர்களோ தங்கள் பெயர்களை அறப்போராட்டத் துக்குஅறிவிக்கக்கூடாது என்று கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

இவ்வாறு கருணாநிதி கூறி உள்ளார்.

### காங்கிரசில் இணையும் இன்னொரு கட்சி

ஹைதராபாத் நவ 29- இந்திராகாங்கிரஸ் கட்சியோடு எந்தவித நிபநதனையுமின்றி இணைவது என்று சென்னாரெட்டியின் தேசிய ஜனநாயகக்கட்சி முடிவு செய்தது.

ஆந்திர மாநிலத்தின் முன்னாள் முதல்வர் சென்னாரெட்டி இவர் இந்திரா காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகி தேசிய ஜனநாயகக் கட்சியைத் துவக்கினார்.

இப்போது அந்தக் கட்சி இந்திரா காங்கிரஸ் கட்சியுடன் இணைகிறது.

எல்லா தேசிய சக்திகளும் இந்திராகாங்கிரஸில் இணைய வேண்டும் என்று அண்மையில்அகில இந்திய இந்திராகாங்கிரஸ் பொது செயலாளர் மூப்பனார் வேண்டுகோள் விடுத்தது நினைவிருக்கலாம

இந்த வேண்டுகோளை ஏற்று எந்த நிபந்தனையுமின்றி இந்திரா காங்கிரஸ் கட்சியோடு இணைவது என்று தேசிய ஜனநாயகக் கட்சியின் மாநிலக் கவுன்சில் ஒருமனதாக முடிவு செய்தது

இந்தமுடிவினை கட்சியின் தொண்டர்கள் அனைவரும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சென்னாரெட்டி கேட்டுக் கொண்டிருக்கிறார்.

வெடிகுண்டு வெடித்து விபத்து:

## மதுரையில் ரயிலை கவிழ்க்க நாசவேலை

மதுரை, நவ 29- மதுரைஅருகே ரயில்வே தண்டவாளத்தில் வெடி குண்டு வெடித்ததால் பலத்தசேதம் ஏற்படடுள்ளது 'இதனால் மதுரையிலிருந்து விருதுநகர் வழியாக செல்லும் ரயில்கள் மானாமதுரை மார்க்கமாக திருப்பி விடப்பட்டன

மதுரைக்கும் திருப்பரங்குன்றத்துக்கும் இடையே அழகப்பன் நகர் அருகே நேற்றிரவு 12-15 மணிக்கு பயங்கர சத்தத்துடன் குண்டு ஒன்று வெடித்தது. இதனால் ரயில்வே தண்டவாளம் சில அடி தூரம் பிய்த்து எறியப்படடது.

#### தூள்தூளான கண்ணாடிகள்

குண்டு வெடித்ததால் அருகிலிருந்த வீடுகளிலுள்ள கண்ணாடி ஜன்னல்களும் உடைந்துள்ளன

வெடி சத்தத்தை கேட்டு அலறி அடித்துக் கொண்டு வந்த அக்கம்பக்கத்தார் ரயில்வே ஊழியர்களிடம் இதுபற்றி தெரிவித்தனர்.

இந்த சம்பவம் அறிந்த ரயில்வே அதிகாரிகள் சம்பவம் நடந்த இடத்திற்கு வந்தனர்.

இதனால் மதுரையிலிருந்து தூத்துக்குடி செல்லும் முத்துநகர எக்ஸ்பிரசும், நெல்லைக்கு செல்லும் நெல்லை நகர எக்ஸ்பிரசும் மானாமதுரை மார்க்கமாக திருப்பி விடப் பட்டது.

சம்பவம் பற்றி அறிந்தவுடன் ரயில்வே ஐ ஜி. ராமலிங்கம் இன்று காலை அங்கு விரைந்தார்

சிவகாசியிலிருந்து கோஸ் என்ற வெடி குண்டு நிபுணர் வந்து வெடிகுண்டு சிதறல்களை பார்வையிட்டு வெடித்தகுண்டு எஸ். ஜி. 90 ரகத்தை சேர்ந்தது என்று குறிப்பிட்டார்.

இந்த சம்பவத்தில் துப்பு துலகக ரயில்வே போலீஸ் நாயும், மாநில போலீசுக்கு சொந்தமான நாயும் வரவழைக்கப்பட்டுள்ளது நாய்கள் சிறிது தூரம் மோப்பம் பிடித்துச் சென்று டி வி எஸ் நகருக் கருகேஉள்ளபூங்கா அருகில் படுகது விட்டன.

இன்று காலை சீர்குலைந்த ரயில்வே பாதை சீரமைக்கப்பட்டு 11 10 மணிக்குவிருதுநகர் மதுரை பாசஞ்சர் அந்த வழியே சென்றது.

போலீசார் இது குறித்து மேலும் விசாரித்து வருகின்றனர்.

## கொடைக்கானல்டிவி: தமிழில் ஒளிபரப்பு

சென்னை, நவ 29- கொடைககானல் தொலைக்காட்சிநிலையம் ஜனவரி 1 முதல் தமிழ் நிகழ்ச்சிகளை ஒளிபரப்பும்

சென்னைகொடைக்கானல் மைக்ரோவேவ் தொடர்பு பற்றிய சோதனை வெற்றிகரமாக நடந்துள்ளது தொலைத் தொடர்பு பொறியாளர்கள வந்த ''மைக்ரோ,, வேவ் தொடர்பு சாதனத்தை அமைத்துள்ளனர்.

டிசம்பர் முதல் வாரம் அதனை முறையாக தொலைக்காட்சி நிலையத்திடம் ஒப்படைப்பார்கள்.

இந்த தொடர்பு மூலம் ஜனவரி 1ந் தேதியிலிருந்து கொடைக்கானல் தொலைக்காட்சி நிலையம் தமிழ் நிகழ்ச்சிகளை ஒளி பரப்பும்.

தற்போது கொடைக்கானல் நிலையம் இன்சாட் மூலம் டெல்லி நிகழ்ச்சிகளைப் பெற்று ஒளிபரப்புகிறது

### ராணுவ வீரரை சுட்டு கொன்ற பயங்கரவாதி

சண்டிகர், நவ 28- பஞ்சாபில்ராணுவவீரர் ஒருவரை பயங்கரவாதிசுட்டுக கொன்றார் இந்த சம்பவம் லூதியானா அருகேநடந்தது ராணுவ வீரரின் துப்பாக்கியைப் பறிக்க தீவிரவாதிகள் முற்பட்டனர்.

அதைஅவர் தடுத்தபோது அந்த ராணுவ வீரரை தீவிரவாதிகள் சுட்டுக் கொன்றனர் மற்றொரு இடத்தில் டெலிபோன் ஊழியர் ஒருவரை சுட்டுவிட்டு அவரது ஸ்கூட்டரை பறித்துச் சென்றனர்.

# அண்ணாநகர் குடிநீர் வசதி: மேலும் ரூ. 16 லட்சம் ஒதுக்கீடு

சென்னை, நவ. 29- மேற்கு அண்ணாநகர் விரிவாக்கப் பகுதியிலுள்ள 88 குடியிருப்புகளுக்கு தண்ணீர் வழங்க 16 லட்ச ரூபாய் திட்டத்துக்கு முதல்வர் புரட்சித் தலைவர் ஒப்புதல்அளித்துள்ளதாக ஜேப்பியார் கூறினார்.

சென்னை அண்ணா நகரில் சென்னை பெரு நகர குடிநீர்வாரியம் சார்பில் நடைபெற்ற விழாவில் பங்கேற்று அதன் தலைவர் ஜேப்பியார் பேசியதாவது:-

பல மாநாடுகளிலும் பொதுக் கூட்டங்களிலும் வரவேற்கவும், பேசவும் வாய்ப்பு தந்த முதல்வர் புரட்சித்தலைவர், அரசு நிகழ்ச்சியில்முதன் முதலாக வரவேற்கும் சந்தர்ப்பத்தைஎனக்குதந்துள்ளார் இதற்காக என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தப் பொறுப்பை முதல்வர் புரட்சித்தலைவர் என்னிடம் வழங்கியவுடன் இந்தப் பகுதிக்கு வந்தேன். அப்போது இங்கு வாழும் மக்கள் சில விவரங்களைத் தெரிவித்தனர். வீட்டுவசதி வாரிய வீடுகளுக்கு குடிநீர்வாரியம் தண்ணீர் வழங்குவது பற்றி சிலசிக்கல் எழுந்தது. உடனே நானும் திருப்பூர் மணிமாறனும் சந்தித்து பல ஆண்டுகளாக தீர்க்கப்படாத இந்தப் பிரச்சினைக்கு தீர்வு கண்டோம் இதை எங்களுக்கு கற்றுத் தந்தவர் புரட்சித்தலைவர்

1977ம் ஆண்டு ஜூன் மாதம் 30ம் தேதி புரட்சித் தலைவர் பதவி ஏற்ற பின் சென்னை மெரினா கடற்கரையில் பேசினார், அப்போது அனைத்து மக்களுக்கும் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்குவேன் என்றார். அதை இன்று படிப்படியாக செய்து வருகிறார். உழைத்து சம்பாதித்த பணத்தை ஏழைகளுக்கு வாரி வழங்கிய புரட்சித் தலைவர் இன்று அந்த ஏழை மக்களின் அடிப்படை தேவைகளை பூர்த்தி செய்யும் திட்டங்களுக்கு வாரிக்கொடுக்கிறார்.

## கொளத்தூர்-வில்லிவாக்கம்

மேற்கு அண்ணா நகர் பகுதிக்கு தண்ணீர்கொடுக்கும் போது அருகிலுள்ள வில்லிவாக்கம், கொளத்தூர், கொடுங்கையூர், எருக்கஞ்சேரி பகுதிகளுக்கும் குடிநீர் வழங்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்றவுடன் உடனே ஒப்புக் கொண்டார்.

இந்தத் திட்டத்தை விரைவாக முடிக்க பல ஒப்பந்தக்காரர்களிடம் பணியைதர இருக்கிறோம். ஓராண்டுக்குள் தண்ணீர் கிடைக்கும் திட்டமிடுதல் முக்கியமல்ல அதை செயல் படுத்துவது தான் முக்கியம் இதை எங்களுக்கு கற்றுத் தந்தவர் புரட்சித்தலைவர்.

## முதல்வர் ஒப்புதல்

அம்பத்தூர்நகராட்சிக்கு உட்பட்ட அண்ணாநகர் மேற்கு விரிவாக்கத்தில் உள்ள 88 குடியிருப்புகளுக்கும் இந்தத் திட்டத்தோடு இணைத்து 16 லட்ச ரூபாய் செலவில் குடிநீர் வழங்க புரட்சித்தலைவர் ஒப்புதல் அளித்துள்ளார்.

இவ்வாறு ஜேப்பியார் பேசினார்

விழாவில் குடிசைமாற்று வாரியத் தலைவர் அங்கமுத்துகோ-ஆப்டெக்ஸ் தனி அதிகாரி அனகாபுத்தூர் ராமலிங்கம். இளைஞர் அணிச் செயலாளர் ஜே.சி.டி.பிரபாகரன், மாவட்டஎம்ஜிஆர்.மன்றச் செயலாளர் மதுசூதனன் மாவட்ட கழக துணைச் செயலாளர் கு.க.செல்வம், சட்டமன்ற உறுப்பினர்கள் சைதை துரைசாமி, வளர்மதி, முனிரத்தினம், குறளரசுபாரதி கழகத் தோழர்கள் தியாகராய நகர் மூர்த்தி, அண்ணா நகர் கோதண்டராமன், தேசிங்கு, சூளை பாண்டியன்,சி,வி. ஆடலழகன், பொன்னுரங்கம்,சாமிநாதன், துறைமுகம் இளைஞர் அணித்தலைவர் காஜா. சைதை துரை, மாரட்டீன், என். எஸ் மோகன். யாதவராமன் உள்ளிட்ட பலரும் விழாவில் பங்கேற்றனர்,

# கேள்விக்கு என்ன பதில்?

''அரசியல் சட்டத்தின் 17-வது பிரிவை எரித்ததற்காகக் கைது செய்யப்பட்டுள்ள அன்பழகன் முதலியஏழு சட்டமன்ற உறுப்பினர்களும் தமது உறுப்பினர் பதவிகளை இழநதார்கள்'' என்று சபாநாயகர் பாண்டியன் தீர்ப்பளித்ததன் மூலம் ஒரு பெரிய சர்ச்சையையே கிளப்பி விட்டிருக்கிறார்.

''ஜனநாயக விரோதமான செயல்'' என்று கண்டித்திருக்கிறார் கருணாநிதி. ''கொடுமையான சர்வாதிகாரம்'' என்று தாக்கியிருக்கிறார். ''சுப்ரீம் கோர்ட் வரை போவோம்'' என்று சவால் எழுப்பியிருக்கிறார்.

பாண்டியனின் தீர்ப்புக்குஅடிப்படை என்ன?

ஒவ்வோர் உறுப்பினரும் அரசியல் சட்டத்தின் கீழ் விசுவாசப் பிரமாணம் எடுத்த பிறகே பதவியை மேற்கொண்டிருக்கிறார். எந்த அரசியல் சட்டத்தின்கீழ் விசுவாசப் பிரமாணம் எடுத்தார்களோ, அந்தச் சட்டத்தை எரித்ததன் மூலம், இந்த ஏழு பேரும் அரசியல் சட்டததை அவமதித்திருக்கிறார்கள். ஆக, அவர்கள் சட்ட மன்றப் பதவியை வகிக்கத தகுதியானவாகள் அலல

சில கேள்விகள் உதிக்கின்றன

அன்பழகன் முதலியோர் அரசியல் சடடத்தின்கீழ் விசுவாசப் பிரமாணம் எடுத்தது உண்மையா?

அவர்கள் அரசியல் சட்டத்தை முழுமையாகவோ ஒரு பகுதியையோ எரித்தது உண்மையா?

அரசியல் சட்டத்தை எரிப்பது அதை அவமதித்தது ஆகுமா?

அரசியல் சட்டத்தை அவமதித்ததன் மூலம், தாங்கள் எடுத்துக் கொண்ட விசுவாசப் பிரமாணத்துக்கு விரோதமான முறையில் அவர்கள் நடந்து கொண்டதாகக் கொள்ளலாமா?

இந்தக் கேள்விகளுக்கு எல்லாம் என்ன பதில்?

'ஆம்' என்றால், பாண்டியன் தீர்ப்பு சரியானது என்று பொருள் 'இலலை' என்றால அவர் செய்தது தவறு.

யோசித்துப் பார்க்கையில், 'ஆம்' என்ற பதிலே சரியானதாகத தோன்றுகிறது. நன்றி: குமுதம்

# தபால்-மணியார்டர் கட்டணம் உயர்வு

புதுடெல்லி, நவ. 28- தபால் கட்டணம், மணியார்டர் கட்டணம் ஆகியவை உயர்த்தப்படுகின்றன இந்தக் கட்டண உயர்வு ஜனவரி 1ந் தேதி முதல்அமலுக்கு வருகிறது. டெலிபோன், டிரங்கால் கட்டணங்களும் அதிகரிக்கப் படுகின்றன,

அதன்படி, எந்தெந்த கட்டணங்கள் எவ்வளவு உயர்த்தப் படுகின்றன என்ற விவரம் வருமாறு:-

பதிவு தபால் கட்டணம் ரூபாய4 50தாக உயர்த்தப் படுகிறது. (பழைய கட்டணம் ரூபாய், 2-75)

புத்தகங் களுககான வி.பி.பி. பதிவு கட்டணம் சலுகை ரூபாய். 1-25 ஆக உயர்த்தப்படுகிறது (பழைய கண்டனம 65 காசு)

★ அச்சாக்கப்பட்ட புத்தகங்கள் கொண்ட புத்தக 'பாக்கெட்டு களுக்குதபால் கட்டணம் 100 கிராம் எடைக்கு 30 காசு அதன் பிறகு ஒவ்வொரு 100 கிராமுக்கும் தற்போது 15 காசு 10 காசு வசூலிக்கப்படுகிறது. அது 30 காசாக உயர்த்தப்படும்

★ 'ரிக்கார்டு டெலிவரி' கட்டணம் 1 ரூபாயில் இருந்து 2ரூபாயாக உயர்த்தப்படுகிறது.

★ மணியார்டர் கமிஷன் கட்டணம் தற்போது 10 ரூபாய்க்கு 30 காசு வசூலிக்கப்படுகிறது.

புதிய கட்டண உயர்வு படி பழைய கட்டணம் 50 ரூபாய் வரை நீடிக்கப் படும். 50 ரூபாய்க்கு மேல் ஒவ்வொரு 10 ரூபாய்க்கும் 40 காசு வசூலிக்கப்படும். (அதாவது 50 ரூபாய்க்கு மணியார்டர் கமிஷன் ரூபாய் 1-50 50 ரூபாய்க்கு மேல் ஒவ்வொரு 10 ரூபாய்க்கு 40காசுகமிஷன்) தபால் மற்றும் மணியார்டர் கட்டண உயர்வு வருகிற (1987 )ஜனவரி1ந்தேதி முதல் அமுலுக்குவருகிறது

இந்த கட்டண உயர்வு மூலம் மத்திய அரசுக்கு ஆண்டுக்கு ரூபாய் 79கோடி கூடுதல் வருமானம் கிடைக்கும்.

ஒரு முறை பேசுவதற்கான உள்ளூர் டெலிபோன கட்டணம் (2ஆயிரம் தடவைவரை) தற்போது 40காசு இது 60காசாக உயர்த்தப்பட்டுள்ளது.

2ஆயிரம் தடவைக்கு மேல் ஒவ்வொரு முறை பேசுவதற்கு முறை பேசுவதற்கும் கட்டணம் 80 காசு (முந்தைய கட்டணம் 50 காசு)

கட்டணமின்றி பேசுவதற்கான ''கால்'' களின் எண்ணிக்கை 200ல இருந்து 275 ஆகஉயர்த்தப் பட்டுள்ளது,

# சம்பா பயிருக்கு நீர்: அரசு தீவிர ஏற்பாடு

தஞ்சாவூர், நவ 29- தஞ்சாவூர் டெல்டா பகுதியில பயிர் செய்யப் படும் சம்பா நெல் பயிர் பாதிக்கப்படாதவகையில் கர்நாடகத்தில் இருந்து காவிரி நீர் பெறுவதற்கானதீவிரஏற்பாடுகளை தமிழகஅரசு மேற்கொள்ளும்என்றுஉணவுஅமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் உறுதியுடன் கூறினார்.

தஞ்சாவூர் சென்றுள்ள உணவு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பல்வேறு பகுதிகளை பார்வையிட்டார். சிவில் சப்ளை கார்ப்பரேஷன் வேளாண்மைத் துறை. மற்றும் பொதுப்பணித் துறை, ஆகியவற்றைச் சேர்ந்த அதிகாரிகள் கூட்டத்திலும் அமைச்சர் கலந்து கொண்டு பேசினார். மாவட்ட ஆட்சித் தலைவர் கே ஆர் கிருஷ்ணமூர்த்தியும் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டார்.

கூட்டம் முடிவடைந்ததும் பண்ருட்டி ராமச்சந்திரன் நிருபர்களிடையே பேசுகையில் கூறியதாவது:

தஞ்சாவூர் டெல்டாப் பகுதிகளில்சுமார்11லட்சம் ஏக்கர் நிலப்பரப்பில்சம்பா பயிர் சாகுபடி செய்யப் பட்டு வருகிறது. இந்தப் பயிர்கள் பாதிக்கப்படாமல் இருக்க காவிரி நீரை பெறுவதில் தமிழக அரசு தீவிர ஏற்பாடுகளைமேற்கொண்டுள்ளது தமிழக அரசு தனது உரிமைகளை விட்டு கொடுக்காது.

## அரசு நடவடிக்கை

கர்நாடகத்திலிருந்து தேவைக்கேற்ப காவிரிநீர் பெறப்படும் சம்பா பயிர் எந்தவிதத்திலும்பாதிக்கப் படாமல் அரசு நடவடிக்கைகளை மேற்கொள்ளும் சம்பா நெல்அறுவடையின் போது சுமார் 12 லட்சம் டன் நெல் கொள்முதல் செய்ய திட்டமிடப்பட்டுள்ளது.இதில் தஞ்சை மாவட்டத்தில் மட்டும்7 லட்சம் டன் கொள்முதல் செய்யப் படும்

தமிழகத்தின் உணவு நிலைமை திருப்திகரமாகவே இருக்கிறது மத்திய அரசு மாதம் 70 ஆயிரம் டன் அரிசி அனுப்புகிறது இதில் பெரும் அளவு பச்சை அரிசி

தமிழகத்திற்கு 50சதவிகிதம் புழுங்கல் அரிசியும் மீதி அளவில் பச்சை அரிசி மற்றும் உயர்ரக அரிசியை அனுப்புமாறு மத்திய அரசை கேட்டிருக்கிறோம்.

நவீன அரிசி ஆலைகளை கழக அரசே ஏற்றுநடத்துவதற்கான பேச்சு வார்த்தைகளை மத்திய அரசு அதிகாரிகளுடன் நடத்தி வருகிறோம்.

இந்திய உணவுக்கார்ப்பரேஷனிடம் உள்ள நெல் உலரவைக்கும் இயந்திர சாதனங்களை தமிழக அரசே இன்னும் ஒரு சில மாதங்களில் ஏற்றுக் கொள்ளவிருக்கிறது. இதனால் நல்ல பயன் ஏற்படும

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்,

## நீர் சப்ளையில் மாறுதல்

மேட்டூர் அணையில் இருந்து தஞ்சை டெல்டா பகுதிக்கு நீர் விடுவதில் சில மாற்றம் செய்யப்பட்டுள்ளதாக கண்காணிப்பு பொறியாளர் கே. சி நடராஜன் தெரிவித்திருக்கிறார்,

## தலைமைக்கழக அறிவிப்பு

### வட ஆற்காடு மாவட்ட கழகத் தோழர்களுக்கு

காட்பாடி தொகுதி சட்டமன்ற உறுப்பினர்

திரு. கோ. ரகுபதி அவர்கள்

வட ஆற்காடு மாவட்டம் கே வி குப்பம் ஒன்றியச் செயலாளர் பொறுப்பில் மீண்டும் பணியாற்ற இன்று முதல் அனுமதிக்கப்படுகிறார்.

கழக நிறுவனத்தலைவரும் கழகப் பொதுச் செயலாளருமான இதயதெய்வம் மாண்புமிகு முதல்வர்

**டாக்டர் புரட்சித்தலைவர்**

அவர்களின் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. ஹண்டே
துணைபொதுச்செயலாளர்,
அனைத்திந்தியஅண்ணா தி மு.கழகம்.

சென்னை 14
29-11-86

## தலைமைக் கழக அறிவிப்பு

இதயதெய்வம் மாண்புமிகு முதல்வர் டாக்டர் **புரட்சித்தலைவர்** அவர்களின்

## ஆணைக்கு இணங்க சுற்றுப்பயண விவரம்

தமிழகம் முழுவதும் இயங்கிவரும் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றங்களின் செயல்பாடுகள் பற்றிய விவரங்களை முழுமையாக நேரில் அறிந்து வருவதற்காக இதயதெய்வம் மாண்புமிகு முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களின் ஆணைக்கு இணங்க

**திரு. பொ. அன்பழகன்** எம் எல் ஏ. அவர்கள்
பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம்
இராமநாதபுரம் மாவட்ட எம் ஜி.ஆர். மன்றத் தலைவர்

**திரு. இரா. முத்தையா** எம்.எல்.ஏ. அவர்கள்
மதுரை புறநகர மாவட்டக் கழகச் செயலாளர்

**திரு சோ. நவநீதகிருஷ்ணன்** அவர்கள்
மதுரை மாநகர மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றச் செயலாளர்

ஆகிய மூவரும் கீழ்க்கண்ட விவரப்படி எல்லா மாவட்டங்களுக்கும் சுற்றுப்பயணம் செய்கின்றனர்.

மாவட்ட வாரியான சுற்றுப்பயண விவரம் அறிவிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மாவட்டத்திலும் எந்தெந்த இடங்களில் எந்நேரங்களில் செயல்வீரர் கூட்டங்களில் கலந்துகொள்கிறார்கள் என்ற விவரங்களை அந்தந்த மாவட்டக் கழக - மன்ற செயலாளர்கள் விளம்பரமாக அறிவிக்கக் கேட்டுக் கொள்கிறோம்.

சுற்றுப்பயணம் சிறப்படையவும் தோழர்கள் அனைவரும் அவர்களைச் சந்தித்து முழுவிவரங்கள் தெரிவிக்கவும் உரிய வகையில் எல்லா ஒத்துழைப்பினையும் வழங்குமாறு மாவட்ட நகர ஒன்றிய கழக - மன்ற நிர்வாகிகள் அனைவரையும் கேட்டுக் கொள்கிறோம்.

### சுற்றுப்பயண விவரம்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| டிசம்பர் | 1,2,3 | - | தென்ஆற்காடு மாவட்டம் | | டிசம்பர் | 21,22 23 | - | திருச்சி மாவட்டம் |
| ,, | 4,6,7 | - | வடஆற்காடு | ,, | ,, | 24.25 | - | புதுக்கோட்டை ,, |
| ,, | 8,9 | - | தர்மபுரி | ,, | ,, | 26 27 | - | மதுரை ,, |
| ,, | 10,11 | - | சேலம் | ,, | ,, | 28 | - | மதுரை மாநகர் |
| ,, | 14,15 | - | கோவை | ,, | ,, | 29 30 | - | அண்ணா மாவட்டம் |
| ,, | 16 | - | கோவைமாநகர் | | | | | |
| ,, | 17,18 | - | நீலகிரி மாவட்டம் | | ஜனவரி | 3 4 | - | செங்கை ,, |
| ,, | 19,20 | - | பெரியார் | ,, | ,, | 5 6 | - | சென்னை ,, |

சென்னை-14
29-11-86

- தலைமைக் கழகம்

# அமைச்சர் நிகழ்ச்சிகள்

**டாக்டர் நாவலர்**

டிச. 1 திருச்சி, கரூர்
2 பழனி, ஒட்டன்சத்திரம்
3 மதுரை



தமிழ் நாடு மின்சார வாரியம்

## ஒப்பந்தப்புள்ளி அறிவிப்பு

1.0 தமிழ்நாடு மின்சார வாரியத்தின்சார்பாக கீழ்கண்ட பொருள்களை வழங்குவதற்கு மூடி அரக்கு முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப்புள்ளிகள் கீழ்கையொப்பமிட்டவரால் வரவேற்கப்படுகின்றன.

விவரக் குறிப்பிடுகை எண். த.பொ.வி-செ-செ, பொ க எண். 6 86-87.

பொருள்களின் விவரம்: அச்சுத் தொழிலுக்கான வெள்ளை அட்டைத் தாள் (White Pulp Board) அளவு 56×71 சென்டி மீட்டர்-10 கிலோ (மின் கட்டண அட்டைத் தயாரித்தல்)

தேவையான அளவு: 2900 (Gross) குரோஸ்

ஒப்பந்தப் புள்ளியின் விலை: ரூபாய்20 (ரூபாய் 22- மற்ற மாநிலங்களுக்காக)

ஒப்பந்தப் புள்ளி வந்து சேருவதற்கான நாளும், நேரமும்: 10-12-86 மணி 12-00 மதியம்.

முன் வைப்புத்தொகை: ரூபாய் 4500-

குறிப்பு: ஒப்பந்தப் புள்ளியை அஞ்சல் மூலம் பெற விரும்புவோர் ஒப்பந்தப் புள்ளியின் விலையுடன் மேலும் ரூபாய் 10 சேர்த்து அனுப்பவும். (திருப்பித் தரமாட்டாது)

2.0 ஒவ்வொருபிரதிக்கும் ரொக்கமாகவோ, அல்லது பண அஞ்சல் மூலமாகவோ ஒப்பந்தப் புள்ளியில் எண் குறிப்பிட்டு தலைமையகத் தணிக்கை அலுவலர், முதல் மாடி, 800 அண்ணாசாலை சென்னை.2 அவர்களுக்கு செலுத்தி பெறப்பட்ட இரசீதை இணைத்துவிண்ணப்பித்துக்கொள்வதின்பேரில் 1-12-1986 தேதியோ, அதன் பிறகோ கீழ்கையொப்பமிட்ட மண்டலத் தலைமைபொறியாளர்- விநியோகம்- சென்னை, 2-வது மாடி 800, அண்ணா சாலை. சென்னை-2 அலுவலகத்தில் பெற்றுக் கொள்ளலாம். ஒப்பந்தப் புள்ளி பெறுவதற்காக செலுத்தப் பட்ட பணம் எக்காரணம் கொண்டும் திருப்பித் தரப் படமாட்டாது

3.0 அஞ்சலில் அனுப்பப்படும் ஒப்பந்தப்புள்ளிகள் வந்து சேரா விட்டாலோ அல்லது காலதாமதம் ஏற்பட்டாலோ வாரியம் பொறுப்பல்ல.

4.0 ஒப்பந்தங்களை எந்தவிதமான காரணமும் கூறாமல் ஏற்கவோ, நிராகரிக்கவோ கீழ்கையொப்பமிட்ட அதிகாரிக்கு முழு உரிமை உண்டு.

மண்டல தலைமை பொறியாளர்-
விநியோகம்
சென்னை

DIPR-312-MS-86-MA

Edited and Published by K RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D.M.K Perarignar Anna Trust Press at 34. Nelson Manickam Road. MADRAS - 600 029

# லட்சோப லட்சம் மக்கள் பங்கேற்ற மதுராந்தகம் விழா

சென்னை, நவ. 29- முதல்வர் புரட்சித் தலைவர் பங்கேற்ற மதுராந்தகம் விழாவில் லட்சோபலட்சம் மக்கள் பங்கேற்றனர்.

தாய்க்குலத்தினர் பல்லாயிரக்கணக்கில் பங்கேற்றனர்.

மதுராந்தக ஏரி உயர் மட்டக் கால்வாய் மற்றும் 84 வளர்ச்சிப் பணிகளை முதல்வர் புரட்சித் தலைவர் நேற்று மாலை துவக்கி வைத்தார்.

பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவரது பூமுகம் காண, பொன்னுரை கேட்க மதுராந்தகம் ஏரி மைதானத்தில் நேற்று பிற்பகல் முதலே மக்கள் திரளத் தொடங்கினர்.

செங்கை, தென் ஆற்காடு மாவட்ட சாலைகள் அனைத்தும் மதுராந்தகத்தை நோக்கியே இருந்தது.

பஸ்கள், வேன்கள், மாட்டுவண்டிகள் டிராக்டர்களில் மக்கள் சாரிசாரியாக வந்தவண்ணம் இருந்தனர்.

விழாமேடை மாடமாளிகை கூடகோபுரம் போல அலங்கரிக்கப்பட்டு இருந்தது மாடமாளிகையில் அடுக்கடுக்கான மின் விளக்குகள் அலங்காரம் பெற்று இருந்தது

விழா துவக்கத்தில் தீபன் சக்கரவர்த்தி குழுவினர் பாடல்களை பொழிந்தவாறு இருந்தனர்.

இரவு 7 மணி அளவான போது விழா மைதானம் மக்கள் வெள்ளத்தால் நிறைந்து வழிந்தது. மதுராந்தகம் ஏரியில் வங்கக்கடல் வந்து புகுந்தாற்போலஇருந்தது

7மணிக்கு முதல்வர் புரட்சித் தலைவர் மேடைக்கு வந்தார்.

தாரை தப்பட்டை பாண்டு வாத்தியங்கள் முழங்கின, வானில் வெடி முழக்கம், பட்டாசுகள் முழக்கம், மக்களது கரஒலி முழக்கம் எல்லாம் சேர்ந்து விழாமைதானமே எழுச்சிக் கோலம் பெற்றது.

முதல்வர் புரட்சித் தலைவர் புன்னகைபூத்தபடி மேடைக்கு வந்ததும் அலை அலையாக கரஒலி எழுந்துஎதிரொலித்தது.

தீபன்சக்கரவர்த்தி குழுவினர் அப்போதுதான் "பட்டத்து ராஜாவும் பட்டாளசிப்பாயும்" என்ற பாடலை முடித்து. "நான் ஆணையிட்டால் அது நடந்துவிட்டால்" என்று பாடத் தொடங்கியதும் லட்சோப லட்ச மக்களும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து எழுப்பிய கரகோஷம் விண்ணதிர்ந்தது.

பிறகு விழா தொடங்கியது அமைச்சர் கே. கே எஸ் எஸ்.ஆர் ராமசந்திரன் தலைமை வகிக்கவரவேற்புரையை மாவட்ட ஆட்சித்தலைவர் டாக்டர் பி. பாண்டியன் நிகழ்த்தினார்.

முடியுடை மூவேந்தரும் ஒரு வடிவெடுத்து வந்த முதல்வர் என்று அவர் கூறிய போது மக்கள் கடலின் கரவொலி எழுந்து அடங்க நீண்ட நேரம் பிடித்தது,

திட்ட விளக்க உரையை தலைமைப் பொறியாளர் முகமது முஸ்தபா படித்தார்

சட்டமன்ற காங்கிரஸ் கட்சி துணைத் தலைவர் யசோதா காங்கிரஸ் சட்டமன்றஉறுப்பினர் குறளரசு பாரதி, கவிஞர் நா. காமராசன், ஜெகத்ரட்சகன் எம். பி. உக்கம்சந்த், முனு ஆதி ஆகியோர் பேசியபிறகு அமைச்சர்கள் ஆனூர் ஜெகதீசனும் சாத்தூர்ராமச்சந்திரனும் பேசினார்கள்.

இதன்பிறகு மேல்மட்டக் கால்வாய் திட்டம் மற்றும் 84 வளர்ச்சிப் பணிகளையும்முதல்வர் தமது பொற்கரத்தால் துவக்கி வைத்தார்.

அமைச்சர்கள் சாத்தூர் ராமச்சந்திரன் ஆனூர் ஜெகதீசன்மற்றும் முனு ஆதி நா. காமராசன், அனகாபுத்தூர் ராமலிங்கம் உக்கம்சந்த். ஜெகத்ரட்சகன் மயிலை வே தமிழ்மணி, முனிரத்னம் எம்.எல் ஏ ஜே, சி. டி. பிரபாகரன் பிள்ளைபாக்கம் மூர்த்தி கொளத்தூர் கோதண்டம் பிரேம் சந்த், காஞ்சி பன்னீர் செல்வம் மற்றும் ஏராள மானவர்கள்சால்வைகளையும் மாலைகளையும் முதல்வருக்கு அணிவித்தனர்.

விழாவில் பலர் முதல்வர் புரட்சித் தலைவருக்கு நினைவுப்பரிசுகளை வழங்கினார்கள்.

ஏரி காத்தராமர் கையில் கோதண்டம் உள்ளது அதன் நினைவாக முதல்வர் புரட்சித் தலைவருக்கு வெள்ளியால் செய்த கோதண்டமும் (வில்) அம்பும் வழங்கப்பட்டது.

முதல்வர் புரட்சித் தலைவரது உயரம்இருந்த வில்லை முதல்வர் கையில் வாங்கி இடது கையால் நிறுத்தி வைத்துப் பார்த்தார்,

பிறகு வில்லின் நாணை சுண்டிப்பார்த்தார் பிறகு அம்பை வலது கையால் எடுத்துப்பார்வையிட்டார் அதன் பிறகு நாணில் அம்பை வைத்து இருந்த போது மக்கள் மகிழ்ச்சிக் கடலில் திளைத்து ஆரவாரம் செய்தனர்.

தனசேகரன் என்பவர் ரூபாய் 1001 முதல்வரிடம் வழங்கினார் அதை முதல்வர்புரட்சித்தலைவர் சத்துணவுத் திட்டத்திற்கு வழங்கினார்.

8 45க்கு முதல்வர் புரட்சித்தலைவர் உரையை துவக்கினார். சிலநிமிடங்களில்வருணனே வந்து வாழ்த்துவது போல பெருமழை பெய்தது.

மழையைமக்கள் பொருட்படுத்தவில்லை நனைந்தபடி அனைவரும் அவரது பொன்னுரையைக் கேட்டனர். கரஒலிஎழுப்பி மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர்

விழா முடிந்து மதுராந்தகம் சாலைகள் சகஜ நிலைக்கு வர பல மணி நேரம் பிடித்தது

முதல்வர் புரட்சித் தலைவர் வருகையையொட்டி சென்னையில் இருந்து மதுராந்தகம் வரும் வழியெல்லாம் அலங்கார மின் வளைவுகள் வரவேற்பு பதாகைகள், இரட்டை இலை சின்னங்கள். கழகக் கொடிகள். தோரணங்கள் கட்டப்பட்டு இருந்தன

பல்லாவரம், குரோம்பேட்டை. தாம்பரம், பெருங்களத்தூர். வண்டலூர். கூடுவாஞ்சேரி, மறைமலை நகர் செங்கற்பட்டு, மாமண்டூர் எல்லா இடங்களிலும் மின் ஒளி உமிழ் விளக்குகளால் வரவேற்பு வளைவுகள் ஜெகஜோதியாக காட்சி அளித்தது.

## எம்.ஜி.ஆர். மன்ற கூட்டம்

திருவாரூர், நவ 29- தஞ்சை திருவாரூர் எம்.ஜி.ஆர். மன்ற பொது உறுப்பினர்கள் கூட்டம் வரும் 30-ந்தேதி காலை விஜயபுரம் எல்லையம்மன் சன்னதி கந்தவள்ளி திருமண மண்டபத்தில் நடைபெறுகிறது. எனவே மன்ற உறுப்பினர்கள்அனைவரும் தவறாமல் கலந்து கொள்ளுமாறு மன்ற மாவட்ட துணைச் செயலாளர் அப்துல்லாகேட்டுக் கொண்டுள்ளார்.

# முதல்வர் துவக்கிய வளர்ச்சித் திட்டங்கள்

மதுராந்தகம், நவ 29- செங்கை மாவட்ட மக்களுக்காக ரூபாய் 14கோடி செலவில் 84 வளர்ச்சிப் பணிகளை முதல்வர் புரட்சித் தலைவர் துவக்கி வைத்தார்.

கடந்த ஆண்டு உடைப்பு எடுத்து ஆபத்தை உண்டாக்கிய மதுராந்தகம் ஏரியில் ரூபாய் 4 கோடியே 50 லட்சம் செலவில் உயர் மட்டக் கால்வாய் திட்டத்திற்கு முதல்வர் அடிக்கல் நாட்டினார்

இது தவிர ரூபாய் 10 கோடி அளவுக்கு குடிநீர் திட்டங்கள் மற்றும பல வளர்ச்சிப்பணி திட்டங்கள் புதிய பஸ் மார்க்கங்கள் ஆகியவற்றை முதல்வர் துவக்கி வைத்தார்.

### 200 ஆண்டு கழித்து

மதுராந்தகம்ஏரி 1795ம் ஆண்டில் ஆங்கில ஆட்சியில் செப்பனிடப்பட்டது. அதன் பிறகு இப்போது புரட்சித்தலைவர் ஆட்சியில்தான் சீரமைக்கப் படுகிறது

வெள்ளக்காலத்தில்இந்த ஏரியில் 1000 மில்லியன் கன அடி தண்ணீர் உபரியாக வழிந்து வீணாகிறது

கடந்த ஆண்டு ஏற்பட்ட உடைப்பு சரி செய்யப்பட்டுவிட்டது.

புதிதாக 270 அடி நீளம் 21 அடி உயர கலிங்கல் சட்டப்படுகிறது இதனால் வெள்ளக்காலத்தில் உடைப்பு ஏற்படாது. இதனால கூடுதல் விவசாய நிலம் பயன்பட்டு உணவு உற்பத்தியும் பெருகும்.

### 7 மாதங்களில் சீரமைப்பு

கடந்த ஆண்டு உடைப்பு ரூபாய் 85லட்சம் செலவில் 7 மாதங்களில் சீரமைக்கப் பட்டது. புதிய மேல்மட்டக்கால்வாய் ரூபாய் 4.5 கோடியில் உருவாகிறது-

நலிந்த மக்களுக்கு உதவிகள், தொழிற்கருவிகள், வீட்டு மனைப்பட்டா. முதியோர் உதவித்தொகை கணவனால்கைவிடப்பட்ட பெண்களுக்கு உதவித் தொகை. இறந்துவிட்ட அரசு ஊழியர்கள் குடும்பங்கட்கு உதவி மற்றும் பல உதவிகளை முதல்வர் வழங்கினார.

18 புதிய வழித் தடங்களில் 10 புதிய பேருந்துகளை முதல்வர் துவக்கி வைத்தார்.

மொத்தம் 84 வளர்ச்சிப் பணிகளுக்கு ரூபாய் 14 கோடி செலவில் இவைகள் நடைபெறுகின்றன என்று மாவட்ட ஆட்சித்தலைவர் பாண்டியன் கூறினார்.



# திருச்சி மாவட்ட
# எம்.ஜி.ஆர். இளைஞர் அணி தோழர்களுக்கு

**திருச்சி மாவட்ட ஒன்றிய-நகர அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக எம். ஜி. ஆர். இளைஞர் அணி நிர்வாகிகளாக கீழ்க்கண்டவர்கள் இன்று முதல் பணியாற்றுவார்கள்.**

## திருச்சி மாவட்ட ஒன்றிய- நகர நிர்வாகிகள்

### மணப்பாறை ஒன்றியம்

செயலாளர்
ராஜப்பா பி ஏ
மானங்குன்றம்

தலைவர்
எம் முத்துசாமி
பொய்கைப்பட்டி அஞ்சல்

பொருளாளர்
முருகேசன் பி ஏ
283 மதுரை ரோடு, மணப்பாறை வட்டம்

துணைச்செயலாளர்
ராஜன் ரொசாரியோ கருணம்பரம்
ராயம்பட்டி

### கிருஷ்ணராயபுரம் ஒன்றியம்

செயலாளர்
எஸ் எம் செல்வராஜ்
சிந்தவவாடி அஞ்சல்

தலைவர்
கே பெரியசாமி
நந்தன்கோட்டை

பொருளாளர்
எம் முத்துசாமி பி ஏ பி எல்
பிள்ளாபாளையம்

துணைச்செயலாளர்
எஸ் சுகுமாரன்
யு.எஸ் எஸ். இல்லம் லாலாப்பேட்டை வழி

### லால்குடி ஒன்றியம்

செயலாளர்
ஜே ராஜேந்திரன்
சாத்தமங்கலம்.லால்குடி ஒன்றியம்

தலைவர்
ஜி இளங்கோவன் எம் ஏ
திருமணமேடு,லால்குடி அஞ்சல்.

பொருளாளர்
பாஸ்கர் பி ஏ பி எல்

துணைசெயலாளர்
மணி பி காம்
திருமணமேடு, லால்குடி அஞ்சல்,

### அரவக்குறிச்சி ஒன்றியம்

செயலாளர்
பி.ஆறுமுகம்
டி.டி சி,எஸ்மில்ஸ் மலைக்கோவிலூர் அஞ்சல்.

தலைவர்
கே.விஸ்வநாதன்
எலக்ட்ரிக்கல் காண்ட்ராக்டர், கரூர் வட்டம்

பொருளாளர்
வி.நந்தகோபால்
கொக்கலாபுரம் லிங்கநாயக்கன்பட்டி அஞ்சல்

துணைச்செயலாளர்
டி.கே.ராமலிங்கம்
திருமாணிக்கம்பட்டி,

### புள்ளம்பாடி ஒன்றியம்

செயலாளர்
இ லூர்துசாமி பி. ஏ.
வீரகாலூர்,

தலைவர்
சுந்தரராஜன் எம்.ஏ,
கல்லகம்,டால்மியாபுரம்

பொருளாளர்
எம்.ஜெயபால்
கல்லக்குடி,டால்மியாபுரம்

### குளித்தலை ஒன்றியம்

செயலாளர்
சி கண்ணன் (எ)சந்திரசேகரன்
4, கோவிந்தன் பில்டிங். குளித்தலை.

தலைவர்
எம் அஸ்கர்உசேன்,பி ஏ பி எல்.,
குளித்தலை

பொருளாளர்
கே விஜயகுமார், பி ஏ பி எல்
குளித்தலை

துணைச்செயலாளர்
அண்ணா லோகநாதன், எம் ஏ (பி ஜி எல்)
வானாந்தூர் கோட்டைமேடு

### குளித்தலை நகரம்

செயலாளர்
எம். பிச்சை,
வதியம்அஞ்சல்,

தலைவர்
இராசு,பி,ஏ.பி.எல்.
16 டி காவேரி நகர் குளித்தலை

பொருளாளர்
ஏ சதாசிவம்
தெப்பகுளத் தெரு, குளித்தலை நகரம்

துணைச்செயலாளர்
எஸ் சேக்பரீத்
காவேரிநகர், குளித்தலைநகரம்

### பொன்மலை நகரம்

செயலாளர்
பா. பிரிதிவிராஜி
11-சி.36-6 ரயில்வே காலனி, பொன்மலை.

பொருளாளர்
எஸ். பாலசுப்பிரமணியன்
வ.உ சி. தெரு, மலையடிவாரம்,

துணைச்செயலாளர்
ஆர். கோபாலகிருஷ்ணன்,
36, சாரதாஸ் ஸ்டோர் பொன்மலைப்பட்டி.

### அரியலூர் நகரம்

செயலாளர்
எல் தமிழ்வாணன் பி ஏ
17-வடக்கு தெரு. அரியலூர் அஞ்சல்.

தலைவர்
எஸ் தண்டாயுதபாணி
அரியலூர்

பொருளாளர்
எம் ஜபருல்லா பி ஏ
பெரியகடைத்தெரு. அரியலூர் அஞ்சல்

துணைச்செயலாளர்
ஜானகிராமன்
ஆஸ்பிடல் ரோடு அரியலூர்

### மணப்பாறை நகரம்

செயலாளர்
ஏ கணபதி
திருமயம்பட்டி, பொய்கைபட்டி அஞ்சல்

தலைவர்
நா உதயசூரியன்
வாகைக்குளம் ரோடு, மணப்பாறை அஞ்சல்

பொருளாளர்
கே பாலசுப்பிரமணியன்

துணைச்செயலாளர்
ம உதயசூரியன்

கழக நிறுவனத் தலைவர்-
கழகப் பொதுச் செயலாளர்
இதயதெய்வம் மாண்புமிகு தமிழக முதல்வர்

**டாக்டர் புரட்சித்தலைவர்**

அவர்களின் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது,

**ஜே.சி.டி.பிரபாகரன்**
செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக
எம்.ஜி.ஆர் இளைஞர் அணி

சென்னை-14
28-11-86

(பிற ஒன்றியங்களின் தொடர்ச்சி நாளை)

# இந்தியாவுக்குவழிகாட்டும்புரட்சிதலைவர்காங்கிரஸ்எம்எல்ஏபாராட்டு

சென்னை, நவ. 29- இந்தியாவுக்கு வழிகாட்டும் முதல்வராக புரட்சித் தலைவர் விளங்குகிறார் என்று காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர் குறளரசு பாரதி மனம் திறந்து பாராட்டினார்.

சென்னை அண்ணா நகரில் நடைபெற்ற 15 கோடி ரூபாய்க்கான புதிய குடிநீர்திட்ட கழிவுநீரேற்று அகற்று பணிகள் துவக்க விழாவில் பங்கேற்று காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர் குறளரசு பாரதி பேசியதாவது:-

இந்தியாவின் தலைசிறந்த மாநிலமான தமிழகத்தில்பல்வேறு மாநிலங்கள் பாராட்டும் வகையில். சாதனைகளைப் புரிந்து வருபவராக பரங்கிமலை பாரி புரட்சித்தலைவர் விளங்குகிறார் தான்வாழும் வரை தமிழகத்தை செழுமையாக்குவேன் என்றுசூளுரைத்து புரட்சித்தலைவர் எம்ஜிஆர். ஆட்சி நடத்துகிறார்.

என் உயிர் இருக்கும்வரை தமிழக மக்களுக்காக உழைத்துக் கொண்டிருப்பேன் என்று உழைத்து வருகிறார்.

கோட்டை கிடைக்குமென்று சில கோட்டான்கள நினைத்தன. அருப்புக் கோட்டை மட்டுமல்ல எல்லாக் கோட்டையுமே புரட்சித் தலைவருக்குத் தான் சொந்தம் என்பதை அறிந்து சீர்குலைந்து நிற்கின்றார்கள்.

கல்வித்துறையில் இந்தியாவுக்கே எடுத்துக்காட்டாக தமிழகம் விளங்குகிறது. பாரதப் பிரதமர் ராஜீவ்காந்தியின புதிய இருபது அம்சத் திட்டத்தை நிறைவேற்றுவதில் முன்னோடி மாநிலமாக தமிழகம் விளங்குகிறது.

கண்ணன்வெண்ணெயை திருட வருவான் அவனை கையும் களவுமாக பிடித்துவிடலாம் என்று வெண்ணெய் உறியில் பெண்கள் மணியைக் கட்டி வைத்திருந்தனர். வெண்ணெய் திருடவந்த கண்ணன் இந்த மணியைக் கண்டதும் நான் வெண்ணெய் திருடும் போது அடிப்பாயா என்று கேட்க அந்த மணி அடியேன் அடியேன் என்றதாம்.

கண்ணன்வெண்ணெயை எடுத்து வாயில் வைத்ததும் அந்த மணி அடித்ததாம் கண்ணன் ஏன் அடித்தாய் என்று கேட்க கண்ணா! உன் வாயில் பட்டவுடன் அது ஆண்டவனுக்கு படைக்கும் நெய்வேத்தியம் ஆகிறது.

உனக்கு பூஜைநடக்கும் வேளையில் நான் அடிக்காவிட்டால் எனக்கு விமோசனமில்லை என்றதாம். அதுபோல் புரட்சித் தலைவர் மக்களுக்குசெய்து வரும் திட்டங்களை அடியேன் சொல்லாவிடில் அழகில்லை. தமிழ்மக்களின் உண்மையான தலைவர் புரட்சித்தலைவர் தான்.

இவ்வாறுகுறளரசுபாரதி பேசினார்.